113

Reg. No. M. 2997.

தனிப்பிரதி 1 அணா

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

# VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. — குறள்.

VOL. I. { புதுவை, ஸ்ரீமுக ஸு மாசி மீ உரு உ (8—3—34) } No. 15

## திருமந்திரம்

முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணுர் பேர்ந்தறப் பார்ப்பர்க
டன்னை யறிந்திடு தத்துவ ஞானிக
ணன்மையி லைம்புல னுடலி னுலே.

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகண்
முன்னை வினையின் முடிச்சை யவிப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே.

மன வாக்குக் காயத்தால் வல்வினை மூளு
மன வாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னு
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னுற்
றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே.

உ

திருவருள் துணை.




காலமுண்டாகவே காதல்
செய்துய்மின் கருதரிய
ஞாலமுண்டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்
பிரான்தன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்கு
கின்றான்வந்து முந்துமினே.

(திருவாசகம்.)

# வித்தகம்

புதுவை,

ஸ்ரீமுக மாசி மீ 25உ

## துப்புரவு

உலகத்திலே எல்லாச் சாதியாளரும் எல்லாச் சமயத்தவரும் துப்புரவு வேண்டும் என்பர். இம்மை மறுமைப் பயன்தர வல்லது துப்புரவே என்பது யாரும் அறிந்ததே. துப்புரவு லௌகிகத்துக்கே உரியது என்பர் சிலர். இது கருத்து வகையால் உளதாகும் வேறுபாடேயன்றி உண்மையால் நோக்குழி அதுவே பாரமார்த்திகமுமாம். உண்மையை உணர்ந்தொழுகுவோர்க்கு லௌகிகமே பாரமார்த்திகமாகும். அஃதாவது லௌகிகமே பாரமார்த்திகமாகத் திரியும் என்பது. முன்னிலையாய் விளங்கும் அசுத்த மாயா காரியமாகிய உலகமே நமக்குப் பகை என்பதும் ஆலகாலம் என்பதும் வெள்ளிடை. சரீரமும் அத்தன்மைத்தே. பகையாய் விளங்கும் முன்னிலைக் கோரணியால் தமக்குத் துன்பம் நேர்தலை எவரும் விரும்பார். துன்பம் ஒழிதற்கு யாது செய்தல் வேண்டும்? பகையை வெல்லுதல் வேண்டும். பகையை வெல்லுதல் எவ்வாறு? அளவறிந்து இனமறிந்து நிறை யறிந்து ஏற்ற ஏற்ற உபாயங்களால் அப்பகையை நம்முட் சிக்கச் செய்வதே-உறவுபடுத்துதலே வெல்லுதல் என்பது. இது பற்றியே,

குறள்

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

(ஷ 88-ம் அதி-பகைத் திறந் தெரிதல்4)

என்றார் பொய்யில் புலவர். இவ்வாறு நமக்குப் பகையாயுள்ள முன்னிலையை-முன்னிலையாகிய சரீரத்தை-சரீரமாகிய உப்பில் இருக்கும் துப்பை—துப்பாகிய அசுத்த நிறையைஅமலமாக்கி அச்சரீரமாகிய முன்னிலையை வசப்படுத்துவதே-உறவு செய்தலே துப்புரவு என அறிக. துப்பு, துன்பம், பகை, அழுக்கு, களிம்பு, அசுத்தம், பாசம் என்பன ஒன்றே. லௌகிகத்திலும் ஸ்நானம் முதலிய வற்றாலும் உடைகளினாலும் சுத்த முடையரா யிருப்பாரைத் துப்புரவுடையார் என்பர். இத்துப்புரவு கருதியே ஆசுச விதிகளும் ஸ்நான விதிகளும் பிறவும் ஏற்பட்டுள்ளன. துப்புர வில்லாரைத் தாழ்ந்த சாதியாளர் என மதிப்பர். துப்புர வில்லாரைத் தீண்டாச் சாதியாளர் என்பர். தீண்டுதற்கு நாணுவர். தாழ்ந்தவரும் துப்புரவுடையராயின் உயர்ந்தோர் என மதிக்கப்படுவர். அழுக்காகிய, துப்பாகிய பகையை மாற்றுவதே—நட்பாக்குவதே — அமலமாக்குவதே உரவு செய்தல்— உறவு செய்தலாகும். உரவு உறவு, உறுதுணை, வலி என்பன ஒன்றே. உரவு உறவு என்பன வலிமை உறுதுணை எனப் பொருள்படும். நமக்குச் சுற்றமாக — முன்னிலையாக அமைந்த கருவிகள் எல்லாம் நம்மால் நிறையோடு பஞ்சீகரணிக்கப் பட்டுழித் துப்பு நீங்கி நமக்கு உறவாகும் —வசப்படும் — உறுதுணையாகும் — துணைவலியாகும் என்க. சரீரமாகிய முன்னிலையில் உள்ள அழுக்கை—துப்பை—அசுத்த நிறையை, ஏற்ற முன்னிலைப் பொருள்களை—இனமான முன்னிலைப் பொருள்களை நிறைகண்டு பஞ்சீகரணித்துச் சேர்த்து அகற்ற வேண்டும்—உறவு செய்ய வேண்டும். அழுக்கை அழுக்கால் அகற்றுவது என்பது இதுவே. காமம் கோபம் முதலிய குணங்களுக்குக் காரணமாய் நமது சரீரத்துள்ள சாதலைத் தரும் அசுத்த நிறையே அழுக்கு ஆசுசம் என்க. பின்வரும் திருவாக்கும் இவ்வுண்மையை நன்கு புலப்படுத்தும்.

திருமந்திரம்

ஆசுச மாசுச மென்பா ரறிவிலா
ராசுச மாமிட மாரு மறிகிலா
ராசுச மாமிட மாரு மறிந்தபின்
னாசுச மானிட மாசுச மாமே.

(ஷ 8-ம் தந்-23வது சுத்தா சுத்தம் 6.)

சுற்றமாகிய முன்னிலையை—கருவிகளை ஏற்ற உபாயங்களால் உறவு படுத்தினால் — ஒப்புற வொழுகினால் அவை நமக்கு உறவாகும்-உறுதுணையாகும்-துணைவலியாகும். சுற்றத்தை கருவிகளை நாம் நிறைகண்டு பஞ்சீகரணித்து நட்பாக்காவிட்டால் அவை நமக்கு உறவாகா. முன்னிலையாகிய ஐம்புலம் சுற்றம் எனப் படுதல் "ஐம்புலக் கேளிரும் ஒருவாய்ப் புக்கென" என்னும் கல்லாடச் செய்யுளாலும் நன்கு புலப்படும். முன்னிலையாகிய சுற்றம்-கருவி-சரீரம் நமக்குப் பகை. ஏன்? அசுத்தமானவை யாதலாலும் நமது எண்ணப்படி அவை நடவாமையாலும் என்க. ஆதலால் இப் பகைகளைப் பகைமை நீக்கி—துப்பு நீக்கி நட்பாக்கிக் கொள்ளவேண்டும்—உரவு செய்ய வேண்டும். துப்புரவு செய்தல் என்பது இதுவே. வாய்மையில் துப்புரவுடையார் வீடு பேறடைதல்

திண்ணம். இதற்கு இருவினை சொரூபமாகிய உடலுயிர்களின் துப்பு நீங்க வேண்டும்,—அமல மாதல் வேண்டும். இதனால் பிணி மூப்புச் சாக்காடுநீங்கி வீடு பேறு உளதாகும். உலகத்திலே யாவரும் தமது சரீரம் அசுத்தம் நீங்கி—துன்பம் நீங்கித் தூய்மை அடைந்து வசப்படுதற் பொருட்டே அதனை ஸ்நானம் உணவு மருந்து வழிபாடு என்பனவற்றால் அறிந்த வரை ஒருவாறு ஓம்புகின்றார். முன்னிலைப் பொருள்களில் இனமான வற்றை நிறைகண்டு பஞ்சீகரணித்து அருந்துதலால்—சாதகயோகங்களால் தமது சரீரமாகிய உப்பில் இருக்கும் துப்பை நீக்கும் திறன் - துப்புரவு செய்யும்வகை சிற்றறிவுடைய சீவர்களாகிய நம்மால் அறிய முடியாதது. நமது சடபேதம் கர்ம பேதத்தை நாம் அறியும் திறன் உடையராயினன்றோ அவற்றிற் கேற்ற சாதகங்களையும் அறிய வல்லராவது. நாம் உய்தியடைதற் கேற்ற சாதகயோகங்களை நூல்கள் வாயிலாகவும் அறிய முடியாது. சீவர்கள் சடபேதம் கர்ம பேதங்களுக் கேற்ற சாதக விதிகள் உலகில் நூல்களாக வழங்கவும் முடியாதனவே. நூல்களில் கூறப்பட்டன வெல்லாம் உண்மை நெறிஒன்று இருக்கின்றது என அதனை அவாவுதற்கே துணைபுரிவனவாகும். நெறியல்லா நெறிகளே உண்மை நெறியை அவாவி அடையுமாறு செய்வனவாகும். ஆதலால் நாம் துப்புரவுடையாரல்லர் என்பது வெள்ளிடை. உலகத்தில் ஸ்நானம் பூசை கல்வி முதலியவற்றால் நாம் துப்புரவுடையராய் இருக்கின்றோம் எனவும், அதனால் உயர்ந்த சாதி மாந்தராயினேம் என எண்ணுவ தெல்லாம் போலியே—நமது அறியாமையே. ஏன்? உலகினர் கைக்கொண் டொழுகும் ஆசார அநுஷ்டானங்களால் அவர் உடலில் உள்ள அசுத்த நிறையாகிய துப்பு நீங்காது அவரை அணு அணுவாக உண்டு அவரைத் தென்றிசைக்கே அடிபெயர்த்து ஏகச் செய்தல் கண்கூடாதலின் என்க. ஈற்றில் புண்ணிய சென்மம் ஒன்றில் வாய்மையான துப்புரவு கைகூடுதற்கு உலகப் போலித் துப்புர வெல்லாம் காரணமாதலால் அவையும் இகழற்பாலன வல்ல. துப்பு நீங்குங்கால் உடலுயிர் அமலமடைந்து ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் அடைதல் ஒருதலை. வாய்மையான துப்புரவு இல்லாத - துப்புரவு செய்வதை அறிய முடியாத புலையரும் சண்டாளருமாகிய நாம் உயர்ந்த சாதி மாந்தர் என்று நம்மை உயர்த்தியும் நம்போலிய மற்றையோரைத் தாழ்ந்த சாதி மாக்கள் எனத் தாழ்த்தியும் — புலையர் சண்டாளர் என இகழ்ந்தும் செம்மாப்புற்று அவச்சலனமடைவது அறியாமை யன்றோ! துப்புரவுஇல்லாமையால் நமதுபுலாலுடலைக் கொல்பவராகிய நாமே—தூலம் பிணமாகவிழ மாண்டு போகும் நாமே வாய்மையில் புலையரும் சண்டாளரும் என அறிதல் வேண்டும். சற்குருநாதன் அருளால் பெறும் சாதக யோகங்களை வழுவறத் தாங்கி ஒழுகி அமல முதற்படியை—எம்பெருமான் திருவடியை — ஞான சக்தியை அடையப் பெற்றுப் பொன்னரங்கம் போற்றும் மெய்யடியாரே புலை நீங்கியோர்—துப்பு நீங்கியோர்—துப்புரவுடையோராவர். இது பற்றியே "பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே." என்று அருளினர் தத்துவப் பெரியாராகிய ஆழ்வாருள் ஒருவர். ஆதலால் யாம் வாய்மையான துப்புரவுடையராய் உய்தி யடைதல் வேண்டும். இதற்கு யாது செய்தல் வேண்டும்? செனன மரணப்பிழைக்கு அஞ்சி வீடுபேற்றின்கண் அவாவுடையராய்ச் சற்குருநாதன் தரிசனம் பெற்று அவன் அருள் வழி நின்று முன்னிலைகளை உறவு செய்தல் வேண்டும். அஃதாவது சற்குருநாதன் சடபேதம் கர்மபேதத்துக்கு ஏற்ப விதித்தபடியே நமது சரீரமாகிய உப்பில் மிகுதியாயிருக்கும் துப்பை-களிம்பை —பாசத்தை— குற்றத்தை ஏற்ற முன்னிலைப் பொருள்களை, இருவருணட்டம் பிறழாது, நிறையும் இனமும் அறிந்து பஞ்சீகரணித்து உறவு செய்தல் வேண்டும் — வெல்லுதல் வேண்டும். நமது இச்சையானது நாம் செய்த வினைக்கேற்ப ஐம்புல நுகர்ச்சியை நிறையின்றி அவாவுமாதலால், அவ் இச்சையை—தற்சுதந்தரத்தைத் துவரத் துறத்தல், துப்புரவு இல்லாத நமக்கு அத்துப்புரவுடைமை கைகூடுதற்பொருட்டு, இன்றியமையாத தாகும். துவரத் துறத்தலாவது அவ் ஆன்ம இச்சையாகிய தற்சுதந்தரத்தை அடக்கி ஆசான் விதிக்கும் நிறையுட் புகுத்தலாகும். இங்ஙனமாகாது இச்சை வழிச் செல்வோர் பிணி மூப்புக்களுக்கு ஆளாகி உப்பு காடி என்னும் சுக்கில சுரோணிதத்தாலாய உடம்புக்குக் கூற்றாகி யமவேதனைப்பட்டு மாண்டுபோவர் என்பது திண்ணம். இவ் அரிய பெரிய உண்மையையே பின்வரும் திருவாக்கால் நன்கு புலப்படுத்தியருளினர் நமது பொய்யில் புலவர் என்று அறிக.

### குறள்

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(ஷை 105-ம் அதி—நல்குரவு 10.)

(இ-ள்.)—துப்புரவு இல்லார் — தற்சுதந்தரமாகிய ஆன்ம இச்சைமேலிடுதலால், முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து அருந்திமாயையாகிய பாசத்தை உறவுசெய்ய மாட்டாதார், துவரத் துறவாமை—ஐம்புலன் வழியே நிறையின்றிச்செல்லும் தமது இச்சையாகிய தற்சுதந்தரத்தை முற்றாக விடாதிருத்தல், உப்பிற்கும் காடிக்கும் கூற்று—உப்பு காடி (உப்பு புளி) என்னும் சுக்கில சுரோணிதத்தாலாய தம் உடம்புக்கே கூற்றாகி சாதலடைவர்.

ஒருவனுக்கு நல்குரவினும் நல்குரவாவது ஏற்ற உணவுப் பொருள்களாகிய முன்னிலை ஆகாரங்களை நிறையும் இனமும் அறிந்து பஞ்சீகரணித்து அருந்தும் ஆற்றலில்லாமையே யாதலின் இக் குறள் நல்குரவு என்னும்

அத்தியாயத்து இறுதிக்கண் வைக்கப்பட்டுள்ளது. பல பிறப்புக்கு வித்தாய் விளங்கும் ஆன்ம இச்சையே—அவாவே இதற்குக் காரணமாகும். "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து." எனத் தேவர் கூறியதும். "ஆரா நல்குரவு அவா எனப்படுமே" எனக் குமரகுருபரர் கூறியதும் அறிக. நாமெல்லாம் நமது சரீரமாகிய ஆலயத்துள் வளர்ந்து எழுகின்ற நடு அரசாகிய அக்கினிக்கு—தேபுவுக்கு ஏற்ற ஆகுதி கொடுத்து அச்சரீரத்தை அமலமாக விளைவேறச் செய்ய அறியாது, பல பிறப்புக்களுக்கு வித்தாய் விளங்கும் அவாவினால் கண்டதை யெல்லாம்—இச்சைப்பட்டதை யெல்லாம் உண்டு உண்டு ஆகுதி கொடுத்து அவ் அக்கினியை அசுத்தப்படுத்தி அதனால் துப்புரவுஇன்றி அவச்சலனமடைந்து ஆகாமியங்களை ஈட்டிப் பிணி மூப்புக்களுக்கு ஆளாய் நாமே நமக்குக் கூற்றாகி யமவேதனைப்பட்டு மாண்டு போகின்றோம். இத் தற்கொலையை நிவர்த்திசெய்து நித்தியத்துவம் அடைதற்கு இன்றியமையாச் சாதகம் ஆன்ம இச்சையைத் துவரத்துறந்து துப்புரவு செய்தலே என இக்குறளால் வற்புறுத்தி யருளினர் நமது பொய்யில் புலவர் என்று அறிக.

ஆன்ம இச்சை வடிவினது. தொட்ட உடன் இனிக்கும்படியான பொருள்களையே நாடி அருந்தி அதனால் துன்பமடையும் இயல்புடையது. அசுத்தமான மாயா உலக போகங்களே ஆன்மாக்களால் நிறையின்றி அவாவப்பட்டனவாகும். குருநாதன் விதிக்கும் நிறையோ என்றால் தொட்ட உடன் எட்டிக்கசப்பும், தற்சுதந்தரமென்னும் நமது அவாவுக்கு முற்றும் முரண்படுவதால், ஆற்றொணாப் பெருந் துன்பமாகவும் பின் போகப் போக—படி ஏற ஏற அழியாப் பேரின்பமும் தர வல்லதாகும். "நோக்கி நுண்ணிய நொடியன சொற் செய்து" எனவும், "பையவே கொடு போந்து பாசமெனும் தாழுருவி" (திருவாசகம்) எனவும் பிறவுமாக வரும் தத்துவப் பெரியார் திருவாக்குக்களை நோக்குக. இவை அனைத்தும் அறிவதும் எளிது! உணர்வதும் எளிது! ஒழுகுவதோ மிக அரிது, அரிதினும் அரிதாம். அறிவதற்கே பல பிறப்புக்களில் ஈட்டிய நற்றவம் வேண்டும் என்றால், அறிந்தவாறே வழுவின்றி ஒழுகிப் பேறடைவது எளிதாகுமா? துப்புரவுடையராய் முத்தியடைவது இனிதின் இயலுவதாயின் எத்தனையோ சீவர்கள் அதனை எளிதில் அடைந்திருப்பார்களே! பூதியத்தூய்மை அடைதற்கேற்றவாறு அஃதாவது சரீரமானது சாதலைத் தரும் அசுத்த நிறை நீங்கி நித்தியத்துவம் என்னும் அமல நிறை ஆக்கமுற்றுப் பூரண அமலம் அடைதற்கேற்றவாறு முன்னிலை ஆகாரங்களை நிறையும் இனமும் அறிந்து உண்ணுதலையே சித்தர் பெருமக்கள் "கற்பம் சாப்பிடுதல்" எனக் கூறுவர். கற்பங்களை உண்ணுவதால் ஆம் பயன் துப்புரவு பெறுதலேயாகும்.

அநித்தியமும் அழியுந்தன்மையுடையதுமாகிய அசுத்த நிறையை அழிப்பது—அமல நிறையாக மாற்றுவது—துப்பை உறவு செய்வது எவ்வாறு? எனின், சிறிது கூறப்படும்:

எத்தனையோ கோடி பிறவிகளில் ஈட்டிய நற்றவப்பயனாக நேர்ந்த பக்குவமுடைய சீவர்களுக்கு, அவர்களை ஆட்கொள்வான் முன்னிலையில் தோன்றிய குருநாதன் அச்சீவர்களின் பக்குவம் நோக்கி பஞ்ச பௌதிகக் கூட்டுற வினாலாய அவர்கள் தூலத்தின் இயல்பு இன்னது எனக் கண்டு எவ்வெப் பூத தன்மாத்திரை எவ் எவ் ஏற்ற இறக்க நிறையாகப் பேதித்துப் பொலிகின்றதோ அவ்வவ் ஏற்ற இறக்க நிறையின் பேதங்களை அறிந்து அழியும் நிறையை வகித்திருக்கும் அத்தூலங்கட்கு முன்னிலைப் பொருள்களைக் கண்டு அவற்றின் இயல்பறிந்து நிறையறிந்து இனமறிந்து அவ் ஆசான் ஊட்ட ஊட்ட அத்தூலத்தில் அமைந்த அழுக்கு அணு அணுவாய் அகலும்—துப்பு அகலும்—துப்புரவு உளதாகும்—அவ்வுடலுயிர் ஒழிவற ஒன்றிப் பூரண அமலமடையும் என்க. இஃது என் போல எனின், வண்ணான் அழுக்கேறிய உடைகளையெல்லாம் அமலமாக்கற் பொருட்டு, முன்னிலை அழுக்குக்களாகிய உவர்மண் கோமயம் சுண்ணம் என்பவைகளை நிறை யறிந்து கூட்டிப் பஞ்சீகரணித்து அவற்றில் உடைகளைச் சிறிது சிறிதாகத் தாக்கி மெத்தப் பக்குவமாய் அக்கினியில் வெதுப்பி நீரில் அலம்பிச் சுத்தப்படுத்துவது போல என அறிக. அழுக்கினால் அழுக்கை மாய்ப்பது — தகிப்பது— இறக்கச் செய்வது வர்ய்மையன்றோ! காரமில்லா அழுக்கை காரமுள்ள அழுக்கால் மாய்ப்பது வெள்ளிடையன்றோ! இனத்தை இனம் கொல்லும், இனத்தை இனம் காக்கும் என இருவகையாகக் கூறப்படினும் இவை பொருளால் ஒன்றேயாம். பின் வரும் திருமூலர் திருவாக்கும் இவ் உண்மையை உணர்த்துகின்றது.

## திருமந்திரம்

ஆத முபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த னாதற்கு மூலமே
யாகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போ
லாகுவ தெல்லா மருட்பாச மாகுமே.
(ஷை 8-ம் தந்—பதி பசு பாச வேறின்மை 18.)

இவ்வாறு, இருவினை சொரூபமாகிய உடலுயிர், மாயாகாரியப் பொருள்களை நிறைகண்டு பஞ்சீகரணித்தலாற்றான் துப்புரவு அடைந்து உலகு கண்டு போற்ற மறைந்து உண்மை நிலையடைய வேண்டும். இவ்வாற்றானன்றி மனோதர்மத்தால்—யுக்தியால் வேறு தடம் புகுந்து முத்தியடைவதென்பது முட்டை மதியினர் கூறும் வெற்றுரையேயாம். சரீரத்தில் வித்தாய் விளங்கும் ஆசானாகிய வண்ணான் பிறப்பறிய மாட்டாத வாதிகள் துப்புரவு செய்யும் சுண்ணாம்பு இருக்குமிடம் அறிவது எப்படி? சரீரத்

# ஆரியமும் தமிழும்

( 14-ம் வாரத்தொடர்ச்சி )

"ஆலத்தினல் அமிர்தாக்கியகோன்" (திருக்கோவை) எனவும், "ஆலமுண்டமுதே மிகத்தேக்குவர், காலகாலர் கடவூர் மயானத்தர்" (அப்பர் தேவாரம்) எனவும், "அழிதரு மாக்கை ஒழியச் செய்தவொண் பொருள், அளிதருமாக்கை செய்தோன் போற்றி" (திருவாசகம் திருவண்டப்பகுதி) எனவும் வருவனவற்றை நோக்குக. தமிழ் என்பதனை அமிழ்தம் என்பர். நிறையோடு பஞ்சீகரணிக்கப்படின் அதுவே அமிர்தமாகு மன்றோ! உயிர் அமலமடைந்து சிவமயமாகும்போது அநாதியே அதனோடு சம்பந்தமுடைய மெய் என்ன நிலைமையை அடையவேண்டும்? அஃதும் அமலமடைந்து அதனைப் பிரியாது சத்திமயமாய்ச் சிவாங்கமாகவேண்டும் என்பது சொல்லாமலே அமையும். எவ்விடத்திலிருந்து நிறை பிரிந்து அசுத்தமடைந்து வியாபகம் பெற்றதோ, நிறை கண்டு பஞ்சீகரணிக்கப்படுதலால் அமலமடைந்து மீண்டும் அவ்விடத்தை அடைவதே முத்தியாகும். மெய் அசுத்த நிறைநீங்கி அமலமடையாது பிணமாகுமாயின், உயிர் அத்தகைய பிறிதோர் சம்பந்தத்தை நாடுவதேயன்றிப் பூரணப்பட்டதென்பது அஃதாவது முத்தியடைந்த தென்பது அசம்பாவிதமேயாகும். ஒங்கிடுங்காலம் உடல் இங்கே வீழ்ந்தால் அஃது ஒங்கமாகாது பிறவி நெறியேயாகும். இதனால் மெய் உயிர்களின் அந்நியோந்நிய சம்பந்தம் நன்கு புலப்படும். சற்குருநாதன் பக்குவ சீவர்களுக்கு அருளும் உபதேசம் வியாப்பிய வியாபக நிலைகளாகிய பதி பசு பாச விலக்கணமென்னும் ஆரியம் தமிழ் என்பனவாய் அவற்றுள் அடங்கும். இவ்வுண்மையே "ஆரியமுந் தமிழும் உடனே சொல்லிக் காரிகையார்க்குங் கருணை செய்தானே" எனவும், "தமிழ்ச்சொல் வடச்சொல்எனும் இவ்விரண்டும், உணர்த்துமவனை உணரலுமாமே" எனவும் (திருமந்திரம் ஆகமச் சிறப்பு 9,10) திருமூலரால் குறிக்கப்பட்டதாகும். பின்வரும் சுத்த சாதகச் செய்யுளும் இவ்வுண்மையை நன்கு புலப்படுத்தும்.

உலகிலெச்சமயங்களுமுரைத்திடுதற்
கொருவிரோதங்களுமின்றி
இலகுமச்சமயங்களுக்குமேலாகி
யிலங்கிடுமுபசிட நெறியை
அலகிலெம் மண்ணலருளியவகையுள்
ளசத்தினும்விளக்கிவாக்கினிலும்
குலவிடவரைப்பமென்றனன்விருத்தக்
குன்றினில்வாழ்பெரியநாயகியே.

(நூல் வரலாறு 1.)

உபசிட நெறி—சற்குருநாதன் உபதேசம்.

"காரிகையார்க்கும் கருணை செய்தானே" என்பதனோடு "அலகிலெம் மண்ணல்அருளியவகை" என்பதனை ஒப்பு நோக்கி உண்மை கண்டுகொள்க.

"ஆரியமு தமிழும் உடனேசொல்லி" என்பதற்கு இரண்டு பாஷைகளைக்கடவுள் கூறிவிட்டார் என்பது இயற்கை விரோதமான பொருளுதமில்லாப் போலிக் கூற்றேயாகும். இதன்திறமெலாம் ஈண்டு விரிப்பின் மிகப் பெருகும். ஒலிவரிவடிவு தமிழேயாதலை "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே" எனவும் பிறவுமாக வரும் திருமூலர் திருவாக்காலும், ஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரத் திருப்பதிகத் திருகிதோறும் பல இடங்களில் 'ஞானசம்பந்தன் செந்தமிழ்' எனவும், சம்பந்தன் தமிழ்எனவும், "குன்றாத்தமிழ்" எனவும், பிறவுமாக வருவனவற்றாலும், "கொன்றைச் சடையார்க் கொன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே" எனவும், 'அரியதமிழ்தானளித்தமயில்வீரா' எனவும், 'முத்தமிழால் வைதாரையுமங்கு வாழவைப்போன்' எனவும் பிறவுமாக வரும் அருணகிரிநாதர் பாடல்கள் பலவற்றாலும், ஏனைய தத்துவப் பெரியார் செந்தமிழ்ப் பாடல்களாலும் உணர்ந்துகொள்க. திருவாசகம் தேவாரம் முதலிய தத்துவப்பெரியார் பாடல்களே அமிழ்தமயமாகிய செந்தமிழ் ஆகும். இவ் அமிழ்தச்செந்தமிழ்த் தெய்வப்பாடல்களுக்கும், மாண்டுபோன பொய்மையாளர் இயற்றிய உலக நூல்களுக்கும் உள்ள இடையீடு அளவிடற்கரியதென்பதுசொல்லாமலே அமையும்

வியாபகமாகிய ஒலிவரி வடிவங்கட்கெல்லாம் பொதுப்பெயராகிய தமிழ் என்பது ஒருபாஷைக்கே சிறப்புப் பெயராக வழங்குவதன் காரணம் இன்னது என இயம்பவும் வேண்டுமோ? தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட்படும் செய்கைகளும் குறியீடுகளும் வினைக் குறிப்பு வினைத்தொகை முதலிய சொல்லிலக்கணங்களும் உயர்திணை அஃறிணை முதலிய சொற்பகுபாடுகளும் அகம்புறம் என்னும் பொருட்பாகுபாடுகளும் குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும் அவற்றின் பகுதிகளும் வெண்பா முதலிய செய்யுள் இலக்கணங்களும் இன்னோரன்ன பிறவும் ஒலிவரிவடி

( 8-ம் பக்கம் பார்க்க )

---

தை அலக்ஷியம் செய்து அச் சரீரம் சத்துக் கெட்டுப் பிணமானபின் உயிர் சிவத்தோடு இரண்டறக் கலந்துவிடும் என ஆராயாது கூறிச் சாதலை எதிர்பார்த்த பாவிகளாய்ச் சோம்பேறிகளாய் வீற்றிருக்கும் நாம் நமது சரீரத்துள் வித்தாயிருக்கும் ஆசானை நம்முள்ளே தேடிக்கண்டு அடைவது எப்படி? ஆசானாகிய வண்ணானைக் கண்டாலன்றோ துப்புரவிற் குரிய—சரீரமாகிய உப்பில் இருக்கும்துப்பை துப்பாகிய கைப்பு என்னும் களிம்பை—ஊத்தையை — ஊறலை - ஊறலென்னும் கசிவை — ஒதத்தை நிரோதஞ் செய்தற்குரிய—அகற்றுதற்குரிய சுண்ணும்பு இருக்கும் இடம் தோன்றும். இன்னநேராகிய துப்புரவறியா வெம்பொலிகளாகிய அறிவிலிகளை நோக்கியே "வண்ணான் பிறப்பறிய மாட்டாத வாதிகட்குச், சுண்ணம்பிருக்குமிடம் தோன்றாது" என்றார் தத்துவப்பெரியாராகிய சித்தமூர்த்தி ஒருவர். சற்குருநாதனாகிய வண்ணானை யறிந்து அவன் அருள் பெற்றே துப் பென்னும் அழுக்கேறிய உடலுயிர்களை அமலமாக்க வேண்டும். அவை அமலம் அடைந்து சத்தி சிவாம்சமாகத் திகழ்தலே துப்புரவின் பயனாகிய உண்மைச் சைவமுத்தி நிலையாகும்.

இதுகாறும் கூறியவைகளால் துப்புரவு இன்னது என்பதும் அதனை உடைய மெய்யடியாரே தமது மூலம் பூரண அமலமடைந்து உண்மை முத்தியடைவார் என்பதும் ஒருவாறு உணரப்படும்.

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப் [பார்க்குத்
துப்பாய தூஉ மழை."

சுபம்.

# ஈழநாடும் தமிழும்

யாழ்ப்பாணம் புன்னாலைக்கட்டுவன்
வித்துவான் ப்ரம்மஸ்ரீ சி. கணேசையர்
அவர்கள் எழுதியது.



ஈழநாடு எனினும் இலங்கை யெனினும் ஒக்கும். இவ்விலங்கை தென்னிந்தியாவின் தென் கீழ்த்திசையிலுள்ளதாகிய ஒரு தீவு. இது, சங்க நூல்களுள் ஒன்றாகிய பத்துப்பாட்டினுள் சிறுபாணாற்றுப்படையிலே, "தொன்மாவிலங்கைக் கருவொடு பெயரிய நன்மாவிலங்கை". என்னும் (119–120) அடியுள் "தொன்மாவிலங்கை" யென்று கூறப்படலானும், மணிமேகலையுள், "இலங்காதீவகத்துச் சமனொளியென்னும் சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளும்" என உ௲-ம் காதை 107-ம்-108ம் அடிகளிற் கூறும் "சமனொளி" என்னுமலை இதன்கணுள்ளதாதலானும் இதன் பழமையும் பெருமையும் அறியப்படத்தக்கன. அகத்திய முனிவர் கந்தருவத்தாலிராவணனைப் பிணித்துத் தென்னாட்டிலியங்காதபடி செய்தாரென்று தொல்காப்பிய உரையுட் கூறப்படுதலின் இது முதற் சங்க காலத்திற்கு முன்னும் தமிழ் நாட்டோடு சம்பந்தமுற்று இருந்தது என்பதூஉம், இது சிங்களருக்குரிய நாடாகுமுன் இராக்கதற்குரிய நாடாய் இருந்ததென்பதூஉம், இராக்கதர் பாஷை தமிழாமென்பதூஉம் ஊகிக்கப்படத்தக்கன என்பர் சிலர். அவர் கருத்துப் பொருந்துமென்பது, சிங்கள நாடாகிய காலத்தும் இதன் வடபாகமும் கீழ்பாகமும் தமிழ் நாடாயேயிருத்தலால் அறியப்படும். எவ்வாறாயினும் இதன் வடகீழ் பாகங்கள் செந்தமிழ் நாடென்பது அங்கு வழங்குஞ் செந்தமிழ்ச் சொற்களாலறியப்படும். சங்க காலத்துப் பழந் தமிழ்ச் சொற்கள் ஆங்காங்கே இன்றும் பெரு வழக்காய் இதன் வடபாகங்களிலும் கீழ்பாகங்களிலும் வழங்குகின்றன. அவை பின் சமயம் வாய்த்துழிக் காட்டப்படும். நாகர் என்னும் ஓர் சாதியும் வசித்தமையால் முரஞ்சியூர் முடிநாகராயர் இவ்வீழ நாட்டினரோவென்று சிலரபிப்பிராயப்படுவர். அஃது எங்ஙனமாயினும் கடைச் சங்கப் புலவருள் ஒருவராய மதுரை ஈழத்துப் பூதந்தேவனார் என்பார் இவ்வீழத்து மரபிலரே என்பது துணிபு. ஆதலினிவ்வீழநாடு பண்டுதொட்டு முத்தமிழ்க் குறைவிடமாயுள்ளதென்பது எவராலு மொப்புக்கொள்ளப்படத் தக்கதேயாம். ஆகலின் அவ் வீழநாட்டின் பெருமைக்குக் காரணர்களாயிருந்த தமிழ்ப் புலவர்களின் சரிதத்தையும் ஒருவாறு ஆராய்ந்து அவ்வவரிருந்த கால முறைப்படி இங்கே தருதும்:—

## ஈழத்துப் பூதந் தேவனார்

இவர் மதுரை ஈழத்துப் பூதந்தேவனார் எனவும் படுவர். இவர் மதுரையில் வந்து தங்கிய ஈழத்துப் பூதனது மகன் தேவன் எனப்படுவார். இவர் நாடு ஈழநாடு எனப்படினும் அந்நாட்டில் எவ்வூர் என்பது தெரிந்திலது. இவர் ஏதோ காரணமாக இந்நாட்டை விட்டு மதுரையிலிருந்தவராகத் தெரிகின்றது. மதுரையிலேயே இவர் பிறந்து படித்துச் சங்கத்திலொருவராகச் சேர்ந்தாரெனக் கருதற்கு மிடமுண்டு. இவர் பாலையையுங் குறிஞ்சியையும் பாராட்டியுள்ளார். இவரது பாடல்கள் நற்றிணையிலொன்றும் குறுந்தொகையில் மூன்றும் அகத்தில் மூன்றுமாக ஏழுபாடல்கள் காணப்படுகின்றன. நற்றிணைப் பாடலிலே வாடை வீசுங் குளிர்ந்த காலத்தே தலைவியைப் பிரிந்தோர் மடமையரென்று பாடுவர். அதனை இங்கே தருதும்,

### பாலை

இஃது உலகியல் கூறிப் பொருள் வயிற் பிரிய வலித்த நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

அரவுக் கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்
வீடுறு நுண்டுகி லூடுவந் திமைக்குந்
திருந்திழை யல்குற் பெருந்தோட் குறுமகண்
மணியே ரைம்பான் மாசறக் கழீஇக்
கூதிர் முல்லைக் குறுங்காலலரி
மாதர்வண்டொடு சுரும்புபட முடித்த
விரும்பன் மெல்லணை யொழியக் கரும்பின்
வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி
முதுக்குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை
மூங்கி லங்கழை தூங்க வொற்றும்
வடபுல வாடைக்குப் பிரிவோர்
மடவர் வாழியில் வுலகத் தானே. (366)

இச் செய்யுளில் அரவுக்கிளர்ந்தன்ன அல்குல் என்றதனால் காமஞ்சான்ற இளமகள் என்பதையும், நுண்டுகிலூடு வந்திமைக்கும் அல்குலென்றதனால் துகிலின் நுண்மையையும், மணியேரைம்பாலென்றதனால் ஐம்பாலினழகையும், முதுக்குறை குரீஇ என்றதனால் குடம்பை செய்யுங் குரீஇயின் நுண்மதியையும் புலப்படுத்தியிருத்தல் மிகவும்

# உடம்பின் அருமை பெருமை

[14-வது வாரத்தொடர்ச்சி]

ஞானசாரியனிடம் – எம்பெருமானிடம் கிரமமாக உபதேசம் பெற்றுச் சாதக யோகங்களை அனுட்டிக்குங்கால் கர்மங் காரணமாக ஒருகால் அவை பூர்த்தி யடையப் பெறாது இறந்தோர்க்கு மரண வேதனை உண்டெனினும், அவ் வேதனை வெளிப்படையாகத் தோன்றாதவாறு பிராணவாயு அவர் உடலை விட்டு எளிதிற் பிரியுமென்றே கூறலாம். இதுவும் உபசார மான கூற்றேயாகும். ஏன்? உடலை விட்டு உயிர் பிரிவது எவ்வாற்றானும் மரணமே யன்றிப் பிறிதொன்றாதல் இல்லையாதலின்! இவ்வாறு இறந்தோர் பிணங்களையே புதைத்துச் சமாதி கிரியை செய்யும்படி விதிக்கப்பட்டது. (திருமந்திரம் பூரணக் குகைநெறிச் சமாதி, சமாதிக்கிரியை என்பனவற்றை ஆழ்ந்துநோக்குக.) பிராணவச் சமாதி, குகைச் சமாதி, நெறிச் சமாதி, பூரணச் சமாதி, மோனச் சமாதி முதலாகச் சமாதியும் பலவகையினவாகும். இவற்றின் பொருள் ஒன்றோ பலவா என்பதையும் அறிதல் வேண்டும். அமயம் நேர்ந்துழி விரித்து விளக்கப்படும். "ஈனமில் காயம்" பெற்ற—மாறிப் பிறந்த தத்துவப் பெரியாரே — உலகர் போல் வாழ்ந்து ஒப்புரவொழுகும் சகச நிட்டை யாளரே "தான் அவன் ஆகும் சமாதி" கைகூடப்பெற்ற சீவன் முத்தராவர். "தான் அவன் ஆகும்" (திருமந்திரம் சின்மலாவத்தை 17) என்பது நோக்குக. இச் செய்யுளுக்கும் இறத்தலே முத்தி எனப் பொருள் கூறுவாரும் உளராயின், அதுவும் தற்காலத்தில் வியப்பன்று. திருமூலர் கூறிய உண்மையை (சமாதிக்கிரியை) அறியாத பிற்காலத்தில்—தற்காலத்தில் சாமானிய உபாசக நிட்டையாளர் பிணங்களும் பிறர் பிணங்களும் நிலத்துட் புதைக்கப்பட்டுச் சமாதிக்கிரியையும் பண்ணப்படும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது. இவற்றால் எவ்வாற்றானும் நிலத்துட்புதைக் கப்படுவன பிணங்களே என்பதும், இது பிறவிநெறியே என்பதும் நன்கு புலப்படும்—வெள்ளிடைமலைபோல் விளங்கும். சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர்—உபாசக நிட்டையாளர் தூலம் நித்தியத்துவம் அடைய முடியாது அழிந்துவிடும்—பிணமேயாகும். அமல முதற்படியை மிதித்துச் சகச நிட்டை கைவரப் பெற்றோர் தூலம் அசுத்த நிறை நீங்கி அமலமடையப் பெற்றனவாதலின் அழிவடைய மாட்டா. இவ்வாறு அமலமடைந்த வடிவங்களே சிவலிங்கமாகத் திகழ்தற்கும் உரியனவாகும். பிணமாதற்குரிய உபாசக நிட்டையாளர் தூலம் சிவலிங்கமாகத் திகழ்தலும் அசம்பாவிதம். சகச நிட்டையாளராய்த் தூலம் அமலமடையப்பெற்ற பட்டினத்தடிகள் அருமை பெருமை அறியாது, அவ் அடிகள் முத்தியடையுங்காலத்தில்—நேரத்தில், உபாசக நிட்டையாளர்போல் வாயோடு கண்மூடி அசைவற வீற்றிருந்தார் எனவும், அவர் தூலமும் மண்ணினுல் தடுக்கப்பட்டது என்பது போலவும் கருதவும் விளம்பவும் துணிவாரும் உளர். அசுத்த நிறை நீக்கிய அடிகள் திருமேனி

---

பாராட்டத்தக்கது. இன்னும், குறுந்தொகையில் வரும் மூன்று செய்யுட்களும் மிகவுஞ் சிறந்த பொருளமைவுடையன. அவற்றுளொன்று காட்டுதும்:—

குறிஞ்சி.

இது தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியஞ்சிய தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

வெறியென வுணர்ந்த வேல னேய்மருந்  
தறியா னாகுத லன்னை காணிய  
வரும்பட ரெவ்வ மின்றுநா முழப்பினும்  
வாரற்க தில்ல தோழி சாரற்  
பிடிக்கை யன்ன பெருங்குர லேனை  
யுண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே  
சிலம்பிற் சிலம்புஞ் சோலை  
யிலங்குமலை நாட னிரவி னானே. (360)

இதில் வெறியென வுணர்ந்த வேலனென்றதனால் அவன் பேதமையையும், கொடிச்சிகைக்குளிர் சிலம்பிற் சிலம்பு மென்றதனால் அக்குளிரினொலியின் பெருமையையும் உணர்த்துதல் மிகவுஞ்சிறப்புடைத்து. தினைக்குரலின் வளைவிற்கு பிடிக்கையை யுவமை கூறுதலும் வியக்கத்தக்கது.

இன்னும் நெடுந்தொகையுள் வரும் மூன்றுள் ஒன்று காட்டுதும்:—

குறிஞ்சி.

முதைச் சுவற் கலித்த மூரிச் செந்தினை  
யோங்குவணர்ப் பெருங்குர லுணீஇய பாங்கர்ப்  
பகுவாய்ப் பல்லி பாடோர்த்துக் குறுகும்  
புருவைப் பன்றி வருதிற நோக்கிக்  
கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய  
நெடுஞ்சுடர் விளக்க நோக்கிவந்து நம்  
கடுங்து துயர் களைந்த நன்ன ராளன்  
சென்றனன் கொல்லோ தானே குன்றத்  
திரும்புலி தொலைத்த பெருங் கையானைக்  
கவுண்மலி பிழிதருங் காமர் கடாஅ  
மிருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்  
திருங்கல் விடரளை யசுண மோர்க்கும்  
காம்பமலி சிறும்பிற் பாம்புபடத் துவன்றிக்  
கொடுவிர லுளியங் கெண்டும்  
வடுவாழ் புற்றின் வழக்கரு நெறியே. (88)

இச்செய்யுளில் பன்றி செந்தினைக் குரலையுண்ணும்படி பல்லிப்பாடோர்த்துக்குறுகும் என்றதும், அப்பல்லியின் நிமித்தம் அதற்கு பிழைத்தமையைக் குறிப்பிட்டு,

"கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய  
நெடுஞ்சுடர் விளக்கம்"

என்றதூஉம் மிகவும் பாராட்டப்படத்தக்கன. இன்னும் அசுணம் யாழோசையில்விருப்புடையதென் பீதைக்குறிப்பிட்டு "யாழ்செத்தசுணமோர்க்கும்" என்றும் காடிகுரும் பிதேகும் இயல்பைக் குறிப்பிட்டுக், "கொடுவிரலுளியங் கெண்டும் வடுவாழ்புற்றின்" என்றும்கூறுதலும் பொருள் களினியற்கையைப் புலப்படுத்தலின் மிகவும் மகிழத்தக்கன.

(தொடரும்)

மண்ணினால் தடுக்கப்படுவதாகுமா? ஆகாது! ஆகாது! தடுக்கப்படுவதொன்றாயின், அஃது மண்ணாலும் சுண்ணாம்பாலும் அரிக்கப்பட்டு உக்கியும் மக்கியும் போவதேயன்றிச் சிவலிங்க வடிவமாகத் திகழ முடியுமா? முடியாது. அடிகள் உடலத்தை நிட்டையிலிருந்த பாவனையிற் கண்டு எவரும் புதைத்தாரல்லர். அடிகள் தாம் மறையும் நேரத்தில் சில அருட்புதுமைகளைக் காட்டி அஃதாவது தம்மைச் சிலரால் மூடும்படி செய்து அவர் வியப்படையுமாறு ஒருகுன்றின் மேற் காணப்பட்டும், பின்னும் பலமுறை அவ்வாறே மூடச்செய்து வெளியே காணப்பட்டும் திருவருட்செயலான திருவிளையாடல்கள் சிலபுரிந்து—அருட்புதுமைகள் சிலகாட்டி, பின் ஒருகால் தம்மை மூடும்படி செய்து சிவலிங்கவடிவமாகத் திகழ்ந்தனர் என்பதே உண்மையாகும்—அவர் சரித்திரமாகும். அவர் தூலம்—வடிவம் மறைந்து சிவலிங்கவடிவமாயிற்று. அன்றி அடிகள் தூலம் உபாசக நிட்டையாளர் தூலம் போல் நிலத்துட் புதைக்கும்படி பிணமாயிற்று என்றும், அவர் நிட்டையில் இருந்த பாவனையாகவே புதைக்கப்பட்டனர் என்றும் எவரும் கூறத்துணியார்.

( தொடரும் )

---

(5-ம் பக்கத்தொடர்ச்சி )

வருடைய மற்றைய எப்பாஷைகளிலும் பெறப்படா என்பது அறிஞர்நன்குணர்ந்த உண்மையேயாகும். இயற்கை முறையான் அமைந்துள்ள தமிழ் இலக்கணமே வேதாந்த சித்தாந்த இலக்கணம் எனப்படும் பதி பசு பாச இலக்கணம் என்பர். தமிழ் இலக்கணத்தைக் கொண்டே பதி பசு பாச இலக்கணத்தை எளிதில் அறிய முடியும். முச்சுழியாகிய ஆயுதமே பதி. உயிர்-பசு. மெய்-பாசம். உடலுயிர்களின் அந்நியோந்நிய சம்பந்தத்தை உயிர்மெய் யெழுத்துக்களே நன்கு புலப்படுத்தும். உயிர் 5. இவை 12 ஆயின. மெய் 18. ஆயுதம் தனி நிலைபெற்றது. உயிர்மெய் எழுத்துக்களின் வேறான ஆயுதம் என்? இதுவே முக்கண் வடிவம்; திரிநேத்திரம்: ரவிமதி சுழினை; சோம சூரிய அக்கினி; பதிபசு பாசம். இவ் ஆயுதத்தாற்றான் உயிர் மெய்கள்-சீவர்கள் தேகங்கள் உளவாயின. இதுவே யாவற்றுக்கும் மூலகாரணம்.

( தொடரும் )

# Opinion

*from*

JYOTIRBHUSHAN
DR. V. V. RAMANA-SASTRIN.
M.A., PH. D., F.R.A.S., F.R. MET-SOC.,
M.R.A.S., &C.
VEDARANIAM.
*Tanjore Dt., South India.*

"......Your exposition of the *Saiva–Siddhanta* has the true Agamic ring, and is free from the **calophonous** features that have marred some recent self-righteous attempts to rehabilitate the doctrine according to the promptings of prejudice and animus. I am sure your exposition will restore the doctrine to its ancient purity and uncompromising transparency. The Geographical range of the *Agamanta* easily compasses the whole of Kashmir and Nepal in the North, and it means we must be exceedingly careful in narrowing down the lineage of the doctrine to the parochial concern of a few districts of the extreme South. The results of the Mohenjo-Daro and Harappa excavations have tended to bring the period of prevalence of the Agamanta within an ace of 5000 B.C., if not more. Its provenance is to be sure cis—Himalaya and nearer to the Himalayas than otherwise. Your journal will deservedly have a long career as the protagonist of the Agamanta and the Tamil exegesis thereof ,on correct and authoritative lines.

Vedaraniam } V. V.
*20th February 1934*} RAMANAN.

குறிப்பு:—எமது "வித்தக"த்தை ஆர்வமுடன் பெற்று அதன் கண் வெளிவந்த ஒவ்வொரு கட்டுரையையும் ஆவலோடு செவ்வனம் ஆராய்ந்து அவை யெல்லாம் ஆகமாந்தமாகிய பழைய உண்மைச் சைவ சித்தாந்தத்தையே நன்கு விளக்கிக்காட்டுகின்றன எனவும், இவ்வாறே மேலும் ஆகமாந்த உண்மைகளை விளக்கிக்காட்டி எமது "வித்தகம்" என்றும் நின்று நிலவ வேண்டும் எனவும், போலிக் கொள்கைகளாகிய அபிமானப் பேயால் ஆவேசிக்கப்படாது தமது உள்ளத்து எழுந்த ஆராமை மிகுதியால் உண்மையை உரைத்து அரிய பெரிய அபிப்பிராயத்தை வழங்கி அதனை வாழ்த்திய திருமறைக்காட்டு அந்தண குல திலகரும் வேத சிவாகமாதி பல சாஸ்திர விற்பன்னரும், சம்ஸ்கிருத திராவிட மகா பண்டிதரும், சந்தான பாரம்பரிய நூல்களை நன்குணர்ந்தவரும், பௌதிக தத்துவசாஸ்திர பூகோள சிலாஸாசன சரித்திராதி பலவகை ஆராய்ச்சி நிபுணரும் ஆங்கிலம் என்னும் தேங்கு பேருததியை ஒருங்கு குடித்த பெருங்கும்பமுனி போன்ற மகா வித்துவப் பெரியாருமாகிய சாஸ்திரிகளுக்கு எமது மனமார்ந்த வணக்கத்தை சமர்ப்பிப்பதேயன்றி வேறு உஞற்றற்பால கைம்மாறு யாதொன்றும் அறியகில்லேம் என்பதனை மிக்க பணிவுடன் தெரிவிப்பதோடு, பல பாஷா விற்பன்னரும் சகலாகம சாஸ்திர பண்டிதருமாகிய இப்பெரியார் உலகிற்கு உபகாரியாய் நீடுவாழும்படி திருவருளைப் போற்றுகின்றேம்.

[ப—ர்]

---

## அறிவிப்பு

கடிதர்களின் அபிப்பிராயங்களுக்கு அவர்களே பொறுப்பாளிகள்.

## "வித்தகம்"

| வருட சந்தா | முன் பணம் |
|---|---|
| இந்தியா, பர்மா, சிலோன் | ரூ. 3-0-0 |
| மலாயா, சிங்கப்பூர், சைகோன் | ரூ. 4-0-0 |

வித்தக நிலையம்,
புதுச்சேரி.

Sandhanam Printing Works, Pondicherry.

Le Gérant R. Nagarattinam.